[21st August 1961

(இ) The total number of candidates on rolls during 1959-60 in these institutions was 477.

*Welfare of Backward Classes*

* **1307Q.—Sri A. VEDARATHNAM** : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தில் ஷெட்யூல்டு வகுப்பினரின் நலனுக்காக நம் மாநிலத்திற்கு ஒதுக்கிய 16 கோடி ரூபாயை குறைக்கும் உத்தேசம் மத்திய அரசாங்கத்திற்கு உண்டா ?

(இ) அப்படியாளுல், அந்தத் தொகை குறைக்காது வழங்கத் தக்க நடவடிக்கை நம் அரசாங்கத்தாரால் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதா ? அதன் விவரமென்ன ?

**The Hon. Sri P. KAKKAN** : (அ) & (இ) A statement[a] is placed on the table of the House.

**Sri A. VEDARATHNAM** : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற ஏட்டில் இரண்டாவது பாராவில், "The All-India outlay for third plan for backward classes has been drastically cut down to Rs. 100 crores" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த முறையிலே நம்முடைய மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகையைக் குறைக்க ஏற்பாடு உண்டா ? ஒதுக்கப்பட்ட தொகை முழுதும் கிடைக்குமா ? குறைக்கும் உத்தேசம் இருந்தால், அப்படிக் குறைக்காமலிருக்க நம்முடைய அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா ?

**The Hon. Sri P. KAKKAN** : மொத்தமாக, இந்தியா தேசத்திலுள்ள ஆதிவாசிகள், ஹரிஜனங்கள், பின் தங்கிய மக்கள் இவர்கள் எல்லோருக்குமாகச் சேர்த்து 100 கோடி ரூபாய்தான் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கியிருக்கிருர்கள். அப்படி ஒதுக்கும்போது, நம்முடைய மாநில ஜனத்தொகை அடிப்படையில் நமக்கு எவ்வளவு ஈவு கிடைக்குமோ அதைவிடக் கூடுதலாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. கூடுதலாக வந்திருந்தாலும் மேலும் அதிகமாகச் செலவழிக்க வேண்டிய தொகையை இந்த மாநிலமே ஏற்றுக் கொள்வதற்கு முன் வந்திருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூபாய் 12 கோடி செலவு செய்திருக்கிருேம், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூபாய் 20 கோடி செலவு செய்ய இருக்கிருேம் என்பதைக் கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**Sri P. G. MANICKAM** : சென்னை ராஜ்யத்தில் தீண்டாமையினுல் ஏற்படும் கொடுமைகள் அதிகமாக இருக்கின்றன என்றும், இவைகளினுல் பாதிக்கப்பட்டவர்களுடைய புனர்வாழ்வுக்குத் தக்க நடவடிக்கை எடுக்கப்படவேண்டுமென்றும் மத்திய சர்க்காரினுல் நியமிக்கப்பட்ட ஷெட்யூல்டு வகுப்பார், ஷெட்யூல் ட்ரைபினர்களுக்கான கமிஷனர் தம்முடைய அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர். நமது சென்னை ராஜ்யத்திலுள்ள ஷெட்யூல் வகுப்பினரின் புனர்வாழ்வுக்கான காரியங்களை அதிகமாகச் செய்ய வேண்டுமென்று கமிஷனர் அவர்களே தெரிவித்திருக்கும் காரணத்தைக் காட்டியாவது இன்னும் அதிகத் தொகை பெறுவதற்கு நம்முடைய சென்னை சர்க்கார் முயற்சி செய்யுமா ? இதுபற்றி மத்திய சர்க்காருக்கும் தெரிவிக்குமா ?

**The Hon. Sri P. KAKKAN** : அதெல்லாம் திட்டம் போடும்போது நன்கு பரிசீலனை செய்து, இந்த மாநிலத்திற்கு எவ்வளவு ஒதுக்க வேண்டுமென்று முடிவு செய்து இருக்கிருர்கள். மேற்கொண்டும் அதிகமாகத் தேவைப்படுமானுல், அதை இந்த மாநில சர்க்காரே ஏற்றுக்கொள்ளும் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்குத்

[a]Printed as Appendix I on page 532 infra.

21st August 1961]

தெரிவித்துக் கொள்கின்றேன். கனம் அங்கத்தினர் முன்னுரையாகச் சொல்லும்போது, கொடுமைகள் இருப்பதாகக் குறிப்பிட்டார்கள். ஒரு சில இடங்களில் அத்தகைய கொடுமைகள் இருக்கலாமே தவிர, பொதுவாக நம்முடைய மாநிலத்திலுள்ள மக்கள் மனதார நல்ல முறையில் தீண்டாமையை ஒழிப்பதற்கு முன்வந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

### *Marudayar Scheme*

* 1308 *Q.*—SRI K. R. VISWANATHAN (on behalf of Sri T. K. SUBBIAH) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மருதையாறு திட்டத்தினால் எந்தெந்த கிராமங்களில் எவ்வளவு நிலங்கள் (கிராமவாரியாக) பயனடைகின்றன ?

(இ) இதனால் எவ்வளவு தானியம் அதிக உற்பத்தியாகும் ?

(உ) இத்திட்டத்திற்கு எவ்வளவு செலவாகும் ?

(எ) இந்த வேலை எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) to (எ) The attention of the hon. Member is invited to the papers[a] placed on the table of the House.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, மருதையாறுத் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் ஆண்டிலேயே எடுக்கப்படும் என்று முன்னதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அந்தத் திட்டம் பரிசீலனை செய்த பிறகுதான் ஆரம்பிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. பரிசீலனை முடிய இன்னும் எவ்வளவு நாள் ஆகும் ? பரிசீலனை முடிந்து, இந்த வேலை மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டக் காலத்திற்குள் எடுத்துக்கொள்ளப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : திட்டத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்துதான் அதை அரசாங்கம் கவனிக்க முன்வந்துள்ளது. ஆகையால், பரிசீலனை செய்யும்போது, வெகு சீக்கிரம், அதிக நாள் என்பது இல்லை, எவ்வளவு விரைவாகப் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வர முடியுமோ அந்த வகையில் அரசாங்கம் முயற்சி செய்யும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : திருச்சி ஜில்லாவில் பரிசீலனை முடிந்து சிபார்சு செய்யப்பட்டிருக்கிற நான்கு திட்டங்களில் இந்தத் திட்டம் ஒன்றல்லவா ? அப்படியிருக்கும்போது, ஏன் இது இன்னும் பரிசீலனையில் இருப்பதாக அமைச்சர் அவர்கள் பதில் கூறியிருக்கிறார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : அதைத் தான் கனம் அங்கத்தினர் கேட்ட கேள்விக்கு முதலில் பதில் சொன்னேன். இறுதியான முடிவு இன்னும் எடுக்கப்படவில்லை. இறுதி முடிவு எடுத்த பிற்பாடுதான் அதுபற்றி விவரமாகச் சபையில் தெரிவிக்கப்படும்.

SRI S. RAMALINGA PADAYACHI : முதலில் இந்தத் திட்டத்தின் மூலம் 30 ஆயிரம் ஏக்கராவுக்குத் தண்ணீர் பாய வசதி இருக்கும் என்ற வகையில் பரிசீலனை செய்யப்பட்டது. அதற்குப் பின் இதைக் குறைத்து, 15 ஆயிரம் ஏக்கராவுக்குத்தான் பாயும் என்று கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது. அதிகமான ஏக்கராவுக்குப் பாய வேண்டும் என்று எடுத்த திட்டத்தைக் குறைத்துக் கொள்வதினால் அதிகச் செலவாகும் என்ற எண்ணத்தில் இராமல், திட்டத்தை கைவிடாமல் 15 ஆயிரம் ஏக்கராவுக்காவது இதன் மூலம் பாசன வசதி கிடைக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : பரிசீலனை செய்யப்பட்டு நமக்கு வந்திருக்கும் தகவலிலே 13,674 ஏக்கராக்களுக்குத்தான் இந்தத் திட்டத்தை நாம் பயன்படுத்த முடியும் என்று சொல்லி யிருக்கிறார்கள். முதலிலே கனம்

a Printed as Appendix II on pages 532—533 infra.